வென்றான். பரமேசுவர போத்தரையனுக்குப் பின் பட்டம்பெற்றவன். இவன் தந்தை, இரண்ய வர்மமன்.

பராந்தகன் I:—'மதுரைகொண்ட கோப்பரகேசரி.' சோழர்களில் பராக்கிரமசாலிகளுள் முதல்வன். இராஜசிம்ம பாண்டியன், ஈழத்துக் காசியபன் V. வைதும்பசந்தயன், வாணர்கள் இருவர், இவர்களை ஜயித்தவன். சிற்றம்பலம் பொன்வேய்ந்தவன் இவனே. இவன் மனைவியர், கோளமாதேவி முதலியோர். மக்கள், இராஜாதித்தன், கண்டராதித்தன் (I) அரிஞ்சயன், ஆதித்தனுகிய கோதண்டராமன்.

பிருதிவிபதி I:—கங்கவரசன்; பல்லவ நிருபதுங்கவர்ம்மன் கீழ சாண்ட சிற்றரசன். இப்பல்லவ நிருபதுங்கவர்ம்மனுக்குத் துணையாகப் பாண்டியன் வரகுணனோடு திருப்புறம்பியத்தில் யுத்தஞ்செய்து போர்க்களத்து மடிந்தான்.

பிருதிவிபதி II:—முதல் பிருதிவிபதியின் பெயரன்; பராந்தகன்(I) வாணர்களை சயித்து அவர்கள் நாட்டை இவனுக்குக் கொடுத்து, இவனை அன்று முதல் "செம்பியன் மாவலிவாணராயன்" என்று பெயர் தரிக்கக் கட்டளையிட்டான். இவன், பராந்தகன் (I) காலத்துக்குப்பிறபட்டு, இரட்டகன்னரதேவனுல் சோழ இராஜ்ஜியம் கைக்கொள்ளப்பட்ட பொழுது, கன்னரதேவனோடு சேர்ந்துகொண்டான். இவன் மகள் மாதேவடிகள்; இராஜாதித்தன் மனைவி.

போசளவீரநாரசிம்மதேவன்:—போசல வமிசத்தான். இவர்கள் இராஜதானி துவார சமுத்திரம். இவன், சோழ இராஜராஜதேவன (III)-க்குப் பெண் கொடுத்த மாமன். பின்னோன் கஷ்டதசைகளில் மிக்க உதவிபுரிந்து 'சோழ இராஜ்ஜிய பிரதிஷ்டாபனுசாரியன்' என்னும் பட்டம் பெற்றான். இவன் மகன் இராமநாததேவன்; வீரசோமேசுவரன் இவர்கள் கொள்ளிடத்தின் வடகரையில் சமயவரம் என்னும் பெயருடைய கண்ணனூரில், கோட்டை முதலிய கட்டிக்கொண்டு, அதனை இராஜதானியாக்கிச் சோழர்களுக்கு உதவிபுரிய அவ்விடம் வந்தவர்களென்று கூறிக்கொண்டு, ஆண்டுவந்தார்கள்.

வரகுணபாண்டியன்:-பாண்டியர்களிலோர் பராக்கிரமசாலி. பல்லவ வரசனையும் அவனுக்குத் துணையாக வந்த கங்கபிருதிவிபதி (I)-யையும்

தோற்பித்து, பின்னவனைத் திருப்புறம்பியத்திற் கொன்று தீர்த்தான். இவனே தமிழிலக்கியங்களிற் கூறப்படும் வரகுணபாண்டியன். மிக்க சிவபக்தன்.

விமலாதித்தன்:—கீழ்நாட்டுச் சாளுக்கியன். இராஜராஜனு (I)ல் ஜயிக்கப்பட்டுப் பின்பு அவன் மகள் குந்தவை (I)யை, கலியாணஞ் செய்துகொண்டு தன்னாட்டைத் திரும்பக் கொடுக்கப்பெற்று இராஜராஜன்கீழ்ச் சிற்றரசனாக ஆண்டுவந்தான்.

---

# அனுபந்தம் II.

ஒவ்வோர் அரசர்கள் காலத்து வரையப்பட்ட சாஸனமொவ்வொன்றிலும் அவர்கள் மெய்க்கீர்த்தியை முதலில் வரைந்தே மற்ற விஷயங்களை வரைவது வழக்கம். இம் மெய்க்கீர்த்திகளிலிருந்தும் சாஸனங்களில் ஆங்காங்கு காணப்படும் சில விஷயங்களைக்கொண்டுமே நம் தேசத்துச் சரித்திரங்களை எழுதவேண்டியிருக்கிறது. ஆதலால் இம் மெய்க்கீர்த்திகளைத் தமிழபிமானிகளும் சரித்திரவாராய்ச்சி செய்வோரும் வாசித்தல் இன்றியமையாததேயாம்.

---

## பராந்தகன் I.

"மதிரையும் ஈழமுங்கொண்ட கோப்பரகேசரிவன்மற்கியாண்டு"

## இராஜராஜன் I.

---

"திருமகள் போலப் பெருநிலச் செல்வியுந்
தனக்கே யுரிமை பூண்டமை மனக்கொளக்
காந்தளூர்ச்[1] சாலை கலமறுத் தருளி
வேங்கை நாடுங் கங்க பாடியும்
தடிகை பாடியும் நுளம்ப பாடியும்
குடமலை நாடுங் கொல்லமுங் கலிங்கமும்
முரட்டொழிற்[2] சிங்களர் ஈழமண்டலமும்

---

(1) காந்தளூர்சாலை (2) முரட்டெழில்.

இரட்ட பாடி யேழரை யிலக்கமும்
முந்நீர்ப்[3] பழந்தீவு பன்னீரா யிரமுந்
திண்டிறல் வென்றித் தண்டாற் கொண்டதன்
னெழில்வள ரூழியு ளெல்லா யாண்டுந்
தொழுதக விளங்கும் யாண்டே செழியரைத்
தேசுகொள் கோராஜ கேஸரி வன்மரான
உடையார் ஸ்ரீராஜராஜதேவர்க்கு யாண்டு—"

## பரகேசரி ராஜேந்திர சோழதேவன்.

திருமன்னி வளர இருநில மடந்தையும்
போர்ச்சயப் பாவையும் சீர்த்தனிச் செல்வியுந்
தன்பெருந் தேவிய ராகி இன்புற
நெடிதிய[4] லூழியுள் இடைதுறை நாடும்
தொடர்வன[5] வேலிப் * படர்வன வாசியும்
சுள்ளிச் சூழ்மதிற் கொள்ளிப் பாக்கையும்
நண்ணருமுரண மண்ணைக்கடக்கமும்
பொருகட லீழத் தரசர்த முடியும்
ஆங்கவர் தேவியர் ஓங்கெழில் முடியும்
முன்னவர் பக்கல் தென்னவர் வைத்த
சுந்தர முடியும் இந்திர னாரமும்
தெண்டிரை ஈழ மண்டல முழுவதும்
எறிபடைக்[6] கேரளன் முறைமையிற் சூடும்
குலதன மாகிய பலர்புகழ் முடியும்
செங்கதிர் மாலையும் சங்கதிர் வேலைத்
தொல்பெருங் காவற் பல்பழந் தீவும்
செருவிற் சினவி இருபத்தொருகால்
அரசர்களை கட்ட பரசு ராமன்
மேவருஞ் சாந்திமத் தீவரண் கருதி
இருத்திய செம்பொற் றிருத்தகு முடியும்

(3) முன்னீர்ப் (4) நெடுதிய
(5) துடர்வன * கடிகை வழியும்" என்னும் பாடாந்தரமுமுண்டு.
(6) எறிப்படைக்

## அனுபந்தம் II.

பயங்கொடு பழிமிக முயங்கியில் முதுகிட்
டொளித்தசய சிங்கன் அளப்பரும் புகழொடும்
பீடியல் இரட்ட[7] பாடி ஏழரை
இலக்கமும் நவநிதிக் குலப்பெரு மலைகளும்
விக்கிரம வீரர் சக்கரக் கோட்டமும்
முதிர்பட வல்லை மதுரை[9] மண்டலமும்
காமிடை வள...நாமணைக் கோணையும்
வெஞ்சின வீரர் பஞ்சப் பள்ளியும்
பாசடைப் பழன மாசுணி தேசமும்
அயர்வில்வண் கீர்த்தி ஆதிநக ரவையில்
சந்திரன் றொல்குலத் திந்தி ரரதனை
விலைஅமர்க்களத்துக் கிளையொடும் பிடித்துப்
பலதனத் தொடுநிறை குலதனக் குவையும்
கிட்டருஞ் செறிமிளை ஒட்ட விஷயமும்
பூசுரர் சேர்நற் கோசல நாடும்
தன்ம பாலனை வெம்முனை யழித்து
வண்டுறை சோலைத் தண்ட புத்தியும்
இரண சூரனை முரணுகத் தாக்கித்
திக்கணை கீர்த்தித் தக்கண லாடமும்
கோவிந்த சந்தன் மாவிழிந் தோடத்
தங்காத சாரல் வங்காள தேசமும்
தொடுகழற் சங்கு வொட்டல்மஹி பாலனை
வெஞ்சமர் வளாகத்[10] தஞ்சுவித் தருளி
யொண்டிறல் யானையும் பெண்டிர்பண் டாரமும்
நித்தில நெடுங்கட லுத்திர லாடமும்
வெறிமலர்த் தீர்த்தத் தெறிபுனற் கங்கையும்
அலைகடல் நடுவுட் பலகலஞ் செலுத்திச்
சங்கிராம விசையோத் துங்க வர்ம்ம
ஆகிய கடாரத் தரசனை வாகையம்
பொருகடல் கும்பக் கரியொடு மகப்படுத்

---

(7) இறட்ட (8) பெரும்மலைகளும்
(9) மதுர (10) விளாகத்

துளிமையில் பிறக்கிய பருதிதிப்* பிறக்கமும்
ஆர்த்த வகனகர்ப் போர்த்தொழில் வாசலில்
விச்சா திரத்தோ ரணமும் மொய்த்தொளிர்
புனைமணிப் புதவமும் கனமணிக் கதவமும்
நிறைசீர் விசையமும் துறைநீர்ப் பண்ணையும்[11]
வன்மலையூ ரெயிற் றொன்மலையூரும்
ஆழ்கட லகழ்சூழ் மாயிரு டிங்கமும்
கலங்கா வல்வினை இலங்கா சோகமும்
காப்புறு நிறைபுனல் மாப்பப் பாளமும்
காவலம் புரிசை மேவுலிம் பங்கமும்[12]
விளைப்பந் தூருடை வளைப்பந்தூரும்
கலைத்தக் கோர்புகழ் தலைத்தக் கோலமும்
திதமா வல்வினை மதமா[13] லிங்கமும்
கலாமுதிர்[14] கடுந்திறல் இலாமுரி தேசமும்
தேனக்க வார்பொழில் மாநக்க வாரமும்
தொடுகடற்[15] காவற்[16] கடுமுரட் கடாரமும்
மாப்பொரு தண்டாற் கொண்ட கோப்பரகேசரி வன்மரான
உடையார் ஸ்ரீ ராஜேந்திர சோழ தேவர்க்கு யாண்டு.

## ராஜகேசரிவர்ம்மன் ராஜாதிராஜன்.

திங்களேர் தருதன் றொங்கல்வெண் குடைக்கீழ்
நிலமக ணிலவ மலர்மகட் புணர்ந்து
செங்கோ லோச்சிக் கருங்கலி கடிந்து
தன்சிறிய தாதை யுந்திருத் தமைய னுங்
குறிகொள்தன் னிளங்கோக் களையும் நெறியுணர்
தன்திருப் புதல்வர் தம்மையுந் துல்நெறிழில்
வானவன் மல்லன் மீனவன் கங்க
னிலங்கையர்க் கிறைவன்[17] பொலங்கழற் பல்லவன்
கன்ன குச்சியர் காவலரெனப் பொன்னணி
சுடர்(மணி?) மகுடஞ் சூட்டிப்படார்புக

---

* பெருக்கம், (11) பன்னையும் (12) மேவிலிம்பங்கமும்
(13) மாதமா (14) கலாமுதிர்க் (15) கடல்த்
(16) ல்த் (17) புலஞ்

பூரங்கவர்க் கவர்நா டருளிப் பாங்குறு
தென்னவர் மூவருள், மானாபரணன் பொன்முடி ஆனைப்
பருமணிப் பசுந்தலை பொருகளத் தரிந்து
வாரள வியகழல் வீரகே ரளனை
முனைவயிற் பிடித்துத் தந்தி வாரணக்
கதக்க ளிற்றா லுதைப்பித் தருளி
அந்தமில் பெரும்புகழ்ச் சுந்தரபாண்டியன்
கொற்றவெண் குடையுங் கற்றைவெண் கவரியும்
சிங்கா தனமும் வெங்களத் திழந்து தன்
முடிவிழத் தலைவிரித் தடிதளர்ந் தோடத்
தொல்லை முல்லையூர்த் துரத்தி ஒல்கலில்
வேணாட் டரசரைச் சேணாட் டொதுக்கி
மேவுபுக ழிராமகுட மூவர்கெட முனிந்து
மிடல்கெழு வில்லவன் குடர்மடிக் கொண்டுதன்
னாடுவிட் டோடிக் காடுபுக் கொளிப்ப
வஞ்சியம் புதுமலர் மலைந்தாங் கெஞ்சலில்
வேலைகெழு காந்தளூர்ச் சாலை கலமறுத்
தாஹவ மல்லனு மஞ்ச கேவுதன்
றாங்கரும் படையா லாங்கவன சேனையுட்
கண்டப் பயனுங் கங்கா தரனும்
வண்டமர் களிற்றொடு மடியத் திண்டிறல்
விருதர் விக்கியும் விசையா தித்தனுங்
கருமுரட் சாங்க மய்யனு முதலினர்
சமர பீருவொத் துடைய விரிசுடர்ப்
பொன்னோ டயங்கரிப் புரவியொடும் பிடித்து
தன்னா டையிற் சயங்கொண் டொன்னார்
கொள்ளிப் பாக்கை யுள்ளெரி மடுப்பித்
தொருதனித் தண்டாற் பொருகட விலங்கையர்
கோபா விக்கிரம பாஹுவின் மகுடமு
முன்றனக் குடைந்த தென்றமிழ்[18] மண்டல
முழுவ தும்மிழந் தெழுகட[19] லீழம்

(18) தெண்டமிழ் (19) தெழுகட

புக்கலிங் கேசுர னுகிய விக்கிரம
பாண்டியன் பருமணி மகுடமுங் காண்டகு
தன்ன தாகிய கன்னகுச் சியினு
மார்கலி யீழஞ் சீரிதென் றெண்ணி
உளங்கொள் தன் னுடிதன் னுறவொடும் புகுந்து
விளங்குமுடி கவித்த வீரசலா மேகன்
போர்க்களத்[20] தஞ்சிதன் கார்க்களி றிழந்து
கவ்வையுற் றோடக் காதலி யொடுந்தன்
றவ்வையைப் பிடித்துத் தாயைமூக் கரிய
ஆங்கவ மானம் நீங்குதற் காக
மீட்டும்[21] வந்து வாட்டொழில் புரிந்து
வெங்களத் துலர்ந்தவச் சிங்களத் தரசன்
பொன்னணி முடியுங் கன்னரன் வழிவந்
துரைகொ ளீழத் தரசனு கியசீர்
வல்லவ மதன ராஜன் மெல்லொளித்
தடமணி முடியுங் கொண்டு வடபுலத்
திருகாலாவதும் பொருபடை நடாத்திக்
கண்டர் தினகரன நாரணன் கணவதி
வண்டலர் தெரியல் மதுசூ தனனென்
றெனைப்பல[22] வரையரை முனைவயிற் றுரத்தி
வம்பலர் தருபொழிற் கம்பிலி நகருள்
சளுக்கியர் மாளிகை தகர்ப்பித் திளக்கமில்
வில்லவர் மீனவர் வேள்குலர்[23] சளுக்கியர்
வல்லவர் கௌசலர் வங்கணர் கொங்கணர்
சிந்துரர் ஐயணர் சிங்களர் பங்களர்
ஆந்திரர் முதலிய வரைசரிடு திறைகளு
மாறிலொன் றவனியுள் கூறுகொள் பொருள்களு
முகந்துநான் மறையவர் முகந்துகொளக்[24] கொடுத்து
விஷ்ணுலோ கத்து விளங்கமனு நெறிநின்

---

(20) பொருகளத் (21) மீண்டும் (22) றேனைப்பல
(23) வேழகுலர் (24) குடுத்து

றஹூமே தஞ்செய் தரைசுவீற் றிருந்
ஜயங்கொண்ட சோழனுயர்ந்த பெரும்புகழ்க்
கோவிராஜகேசரி வர்ம்மரான
உடையார் ஸ்ரீராஜாதி ராஜதேவர்க்கு யாண்டு:—

## பரகேசரி ராஜேந்திரதேவன்.

திருமாது புவியெனும் பெருமாதர் இவர்தன்
மாதே வியர்க ளாக மீதொளிர்[25]
வெண்குடை யுயர்த்துத் திண்கலி பெயர்த்ததன
சிறிய தாதை யாகிய எறிவலிக்
கங்கை கொண்ட சோழனைப் பொங்கிகல்
இருமுடிச்[26] சோழ னென்றும் பொருமுரட்
டன்றிருத் தம்பியர் தம்முன் வென்றிகொள்
மும்முடிச்[27] சோழனைத் தெம்முனை யடுதிறற்
சோழ பாண்டிய னென்றுங் கோழிமன்
றொடுகழல் வீர சோழனைப் படிபுகழ்க்
கரிகால சோழ னென்றும் பொருதொழில்
வாள்[28] வலித் தடக்கை மதுராந்தகனை
சோழ கங்க னென்றுந் தோள்வலி
மேவிகல் பராந்த தேவனைச் சோழ
வயோத்திய ராஜ னென்றும்
துயரத் தன்பொடு கருதுகா தலருள்
இத்த லம்புகழ் ராஜேந்த்ர சோழனை
உத்தம சோழ னென்றுந் தொத்தணி
முகையவி ழலங்கல் முடிகொண்ட சோழனை
இகல்விசை யாலய னென்றும் புகர்முகத்
தேழுயர் களிற்றுச் சோழகேரளனை
வார்சிலைச்[29] சோழ கேரள னென்றுந்
திண்டிறற் கடாரங் கொண்ட சோழனை
தினகரன் குலத்துச் சிறப்பமர் சோழ

(25) மீதொளி (26) இருமடி (27) மும்மடி
(28) வாழ் (29)

ஜனக ராஜ னென்றுங் கனகடற்
படிகொண்ட பல்புகழ் முடிகொண்ட சோழனைச்
சுந்தர சோழ னென்றுஞ் செந்தமிழ்ப்
பிடிகளிற்[30] றிரட்ட பாடிகொண்ட
சோழனைத் தொல்புவி யாளுடைச் சோழ
கன்னகுச்சிய ராஜனென்றும் பின்னுந்தன்
காதலர் காதலர் தம்முள் மேதகு
கதிராங் கனைகழல் மதுராந் தகனை
வெல்படைச் சோழ வல்லப னென்று
மானைச்[31] சிலைக்கையோ ரானைச் சேவகனை
நிருபேந்திர சோழ னென்றும் பருமணிச்
சுடர்மணி மகுடஞ் சூட்டிப் படிமிசை
நிகழு நாளினுள் இகல்வேட் டெழுந்துசென்
றொண்டிற விரட்ட மண்டல மெய்தி
நதிகளும் நாடும் பதிகளு மநேக
மழித்தனன் வளவனென்னு மொழிப்பொருள் கேட்டு
வேகவெஞ் சளுக்கி ஆகவ மல்லன்
பரிபவ மெனக்கிதென் றெரிவிரித் தெழுந்து
செப்பருந் திறத்த கொப்பத் தகவையில்
சென்றெதி ரேன்றமர் தொடங்கிய[32] பொழுதவன்
செஞ்சர மாரிதன் குஞ்சர முகத்தினுந் (தன்முகத்தினும்)
தன்றிருத் துடையினுங் குன்றுறழ் புயத்தினுந்
தைக்க வுந்தன் னுடல்களி[33] றேறிய
தொடுகழல் வீரர்கள் மடியவும் வகையா
லொருதனி[34] யநேகம் பொருபடை வழங்கியம்
மொய்ம்பமர் சளுக்கி தம்பிஜய சிங்கனும்
போர்ப்புல கேசியுந் தார்த்தச[35] பண்மனு
மானமண் ணவரில்மண்டலி அசோ கையனும்
ஆனவண் புகழ்ஆளும்[36] அரையனும் தேனிவர்

---

(30) பிடிகலிரட்ட (31) மான (32) றொன்றமர்துங்கிய
(33) னுடம்களி (34) தொருதனி (35) தார்த்தத்
(36) ஆரையனும்

மட்டவி ழுலங்கல்மோட் டையனும் திண்டிறல்
நன்னி ஞளம்பனு மெனுமிவர் முதலியர்
எண்ணிலி யரைசரை விண்ணகத் தேற்றி
வன்னிய ரேவனும் வயப்படைத் துத்தனுங்
கொன்னவில் படைக்குண்ட மய்யனும் என்றின்ன
வெஞ்சன வரைசரோ டஞ்சி சளுக்கி
குலங்குலேகுலேந்து[37] தலைமயிர் விரித்து
வெந்நுற்[38] றொளித்துப் பின்னுற நோக்கி
கால்பரிக் தோடி மேல்கடற் பாயத்
தூரத்திய பொழுதச் செருக்களத் தவன்விடு
சத்துருபயங் கான்கர பத்திரன்மூல
பத்திர ஜாதி பகட்டரை சநேகமு
மெட்டுநிரை பரிகளு மொட்டக நிரைகளும்
வராகவெல் கொடிமுதல் ராஜபரிச் சந்தமும்
ஒப்பில்சத் தியவ்வைசாங் கப்பையென் றிவர்முதல்
தேவியர் குழாமும் பாவைய ரீட்டமு
மினையன[39] பிறவு முனைவயிற் கொண்டு
விஜயாபிஷேகம் செய்துதென் றிசைவயிற்
போர்ப்படை நடாத்திக் கார்க்கட லிலங்கையில்
விறற்படைக் கலிங்கர்மன் வீரசலாமேகனைக்
கடகளிற் றொடுமகப்படக் கதிர்முடி கடிவித்
திலங்கையர்க்[40] கிறைவன் மானு பரணன்
காத லிருவரைக் களத்திடைப் பிடித்து
மாப்பெரும்புகழ்மிகவளர்த்தகோப்பரகேசரிபன்மரான
உடையார் ஸ்ரீராஜேந்திர தேவர்க்கு யாண்டு.

---

## ராஜகேசரி ராஜமகேந்திர தேவன்.

திருமகள் விளங்க விருநில மடந்தையை
ஒருகுடை நிழற்கீ ழினிதுநிற்பப் புணர்ந்து
தருமநெறி நிற்ப மனுநெறி நடாத்திய

---

(37) குலகுலகுலேந்து (38) வென்னுற்
(39) மேனையன (40) இலங்கையிற்

கோவிராஜ கேசரி வர்ம்மரான
உடையார் ஸ்ரீ ராஜமகேந்திர தேவர்க்கு யாண்டு.

## வீரராஜேந்திர தேவன்.

திருவளர் திரள்புயத் திருநில வலையந்
தன்மணிப் பூணெனத் தாங்கப் பன்மணிக்
கொற்றவெண் குடைநிழல் குவலயத் துயிர்களைப்
பெற்ற தாயினும் பேணி மற்றுள
வறைகழ லரையர்த னடிநிழ லொதுங்க
வுறைபிலத் துடைகலி யொதுங்க மிறைசெய்து
விரைமலர்த் தெரியல் விக்கலன் றன்னொடு
வரிசிலைத் தடக்கை மாசா மந்தரைக்
கங்கபாடிக் களத்திடை நின்றுந்
துங்கபத் திரிபுகத் துரத்தி யாங்கவர்
வேங்கைநன் னாட்டிடை மீட்டுமவர் விட்ட
தாங்கரும் பெருவலித் தண்டுகெடத் தாக்கி
மாதண்ட நாயகன் சாமுண்ட ராயனைச்
செற்றவன் சிரத்தினை யறுத்து மற்றவ
னொருமக ளாகிய இருகையன் றேவி
நாகலை யென்னுந் தோகையஞ் சாயலை
முகத்தொடு மூக்குவே றாக்கிப் பகைத்தெதிர்
மூன்றாம் விசையினு மேன்றெதிர் பொருது
பரிபவந் தீர்வனெனக் கருதிப் பொருபுனல்
கூடல் சங்கமத் தாகவ மல்லன்
மக்களாகிய விக்கலன் சிங்கண
னென்றிவர் தம்மொடு மெண்ணில்சா மந்தரை
வென்றடு தூசிமுனை விட்டுத் தன்றுணை
மன்னருந் தானும் பின்னடுத் திருந்து
வடகட லென்ன வகுத்தவத் தானையைக்
கடகளி றொன்றாற் கலக்கி அடல்பரிக்
கேசவ சிங்கனைக் கொடிபட முன்னல்
தூசிவெங் களிற்றொடுந் துணித்துக் கேசவ

தண்ட நாயகன் தார்க்கெந் தரையன்
திண்டிறல் மாரயன் சினப்போத் தரய
னிரேச்சய னிகல்செய்பொற்[41] கோதையு வத்தியென்
றூர்த்தடு துப்பி லநேகசா மந்தரை
சிந்த பிந்நம் செய்து பின்னை
முதலி யான மதுவண னோடே
விரித்த தலையொடு[42] விக்கல னோடே
செருத்தொழி லழிந்து சிங்கணன் ஓட
அண்ணல் முதலிய ரனைவரு மமர்போர்ப்
பண்ணிய பகடியிந் தோட நண்ணிய
வாகவ மல்லனு மவர்க்குமு னோடே
வேகவெங் களிற்றினை விலக்கி வாகைகொண்
டங்கவர் தாரமு மவர்குல தனமுஞ்
சங்குந தொங்கலுந் தாரையும் பேரியும்
வெண்சா மரையு மேக டம்பமும்
சூகரக் கொடியும் மகரதோ ரணமும்
புட்பகப் பிடியும் பொருகளிற் றீட்டமும்
பாய்பரித் தொகையொடும் பறித்துச் சேயொளி
வீர சிங்காசனம் பார்தொழ வேறி
எழில்தர உலக முழு துடை யாளொடும்
விசையமணி மகுட மேய்ந்து எழில்கொள்
தத்துமாப்[43] புரவிப் பொத்தப்பி வேந்தனை
வாரணை வண்கழற் கேரளன் றன்னை
ஜனநா தன்தன் றம்பியைப் போர்க்களத்
தலங்கல்சூழ் பசுந்தலை யரிந்து பொலங்கழல்
தென்னனை ஸ்ரீவல் லவன்மகன் சிறுவன்
மின்னவில் மணிமுடி வீரகே சரியை
மதவரை யொன்று னுதைப்பித் துதகையிற்
கோளர் தங்குல செங்கிரை யோடும்
வோறப் பறிந்தோடி மேல்கடல் வீழ

---

(41) செய்யபொற் (42) விரித்தலையொடு (43) தத்துமா

வாரண மருதுளி செலுத்தி வாரியி
லெண்ணருங் களிற்றின் இரட்டை கவர்ந்த
கன்னியர் களிற்றொடுங் கட்டிப் பண்ணுப்
பிடியொடு மாங்கவர் விடுதிறை கொண்டுமீண்டு (சூழ்புனற்)
கொண்டாற் றுறவிற் குறித்த வெம்போரில்
தண்ட நாயகர் தம்மில் திண்டிறல்
மல்லியண் ணனையு மஞ்சிப் பய்யனையும்
பில்குமதக் களிற்றுப் பிரமதே வனையுந்
தண்டா ரசோகையன் றன்னையு மொண்டிறற்
ரத்தியண் ணனையுஞ் சந்தி[44] விக்கிர னுறப்
பத்தி யண்ணன் றன்னையு மத்தகு
தேமரு தெரியல் வீமயன் றன்னையு
மாமதி வங்கா ரனையும் நாமவேற்
கங்கனை நுளம்பனைக் காடவர் கோனை
மங்குமத யானை வைதும்ப ராயனை
யிருந்தலை யரிந்து பெரும்புனற் றனது
கங்கை மாநகர் தைத்தமின் திங்களில்
வழிவரு சளுக்கி பழியொடு வாழ்வதிற்
சாவது சால நன்றென் [45]றேவமுற்
றிங்கிய சிந்தைய னாகி முன்னம்
புதல்வருந் தானு முதுகிட் டுடைந்த
கூடலே களமெனக் குறித்த கூடலில்
வாரா தஞ்சினர் மன்ன ரல்லர்
போர்ப்பெ ரும்பழிப் [46]புரட்ட ராகவென்
றியாவரு மறிய வெழுதிய பதிக
மேவரு மோலை விடையொடும் [47]கொடுத்த
விரட்ட பாடிப் பிரட்டர்கள்
கங்கா கேத்தனை யேவ அங்கவன்
வந்தடி வணங்கி வாசக முணர்த்தலும்
சிந்தையு முகமுந் திருப்புய மிரண்டு

(44) சந்து (45) றெவ
(46) பிரட்ட (47) குடுத்த

மேந்தெழி லுகலையோ டிருமடங் கொலியப்
போந்தப் போர்க்களம் புகுந்து காந்தையில்
வல்லவர் கோனை வரவு காணாது
சொல்லிய நாளின் மேலுமோர் திங்கள்
பார்த்தி ருந்த பின்னைப் [48]போத்தவன்
கால்கெட வோடி மேல்கட லொளித்தலுந்
தேவ நாதனுஞ் சித்தியும் கேசியு
மூவருந் தனித்தனி முதுகிடப் பாவரு
மிரட்ட பாடி எழரை யிலக்க
முரட்டொழி லடக்கி முழங்கெரி மூட்டி
வெங்கதிர்ப்[49] புலியேறு வியந்துவிளை யாடத்
துங்கபத் திரிக்கரை ஜயபத் திரத்தூண்
நானிலம் பரச நாட்டி மேனாள்
வந்த இரட்டனை வல்லவ னாக்கிச்
சுந்தர கண்டிகை கட்டிப்
புரசை யானை புழைக்கையிற் பிழைத்திவ்
வுலக மறிய வோடிய பரிசொரு
பலகையிற் பழுதற வெழுதிய பின்னை
சார்த்தின வுரையுஞ் சளுக்கிபதம் பெற்ற
பூத்தின மார்வொடும் பூட்டிப் போர்த்துந்
தாண்கைக் கொண்ட வேங்கைநன் னாடு
மீட்டுக் கொண்டலால் மீள்கிலம் கேட்டுநீ
வல்ல னாகில் வந்துகாக் கென்று
சொல்லி யெடுத்தவத் தானை விசைய
வாடையொ டடுத்தபே ராற்றில் தடுத்த
ஜனநா தனையுந் தண்ட நாயனை
மினமார் கடக்களிற் றிராஜமய் யனையு
முதப்பர சனையு முதலாக வுடைய
வப்பெருஞ் சேனையை அடவியிற் பாச்சிக்
கோதா விரியில் தன்போ தகநீ
ருண்ணக் கலிங்க மூங்கடந் தப்பால்

---

(48) பொத்தவன் (49) வெங்கதிற்

சக்கரக் கோட்டத் தப்புறத் தளவு
மேவருந் தானைத் தாவடி செலுத்தி
வேங்கைநன் னாடுமீட்டுக் கொண்டு தன் பூங்கழற்
கடைக்கலம் புகுந்த படைக்கலத் தடக்கை
விஜையா தித்தற் கருளி விசைகொடு
மீண்டுவிட் டருளி இகலிடைப் பூண்டஜயத்
திருவொடுங் கங்கா புரிபுகுந் தருளி
அங்கே ராஜாதி ராஜ ராஜ
னெனத்தரா திபராகத்தம் நியமத்தியற்றிப்
படியில் மன்னவ ரடிதொழு தேதத்த
வின்மணிப் பீடத்திருந்து வேங்கைநன் னாட்டினிற்கொண்ட
விருநிதிப் பிறக்கம் வரிசையிற் காட்டி
ஆழியுங் களமுங் கழற்றி யாங்கவர்
வாழிய விரத மாற்றிப் பூழிமஞ்
செய்து வரம்பாட் செங்கோல் செலுத்தி
மேதினி விளக்கி மீதுயர் வீரத்
தனிக்கொடி தியாகக் கொடியொடு மேற்பவர் [வீற்றிருந்து
வருகென்று நிற்ப போர்த்தொழி லுரிமையி லெய்தி அரசு
மேவரு மனுநெறி விளக்கிய கோராஜகேசரி வர்ம்மரான உடை
ஸ்ரீவீர ராஜேந்திர தேவர்க்கு யாண்டு :— [யார்

---

## வீரராஜேந்திரதேவன்.

---

வீரமே துணையாகவும் தியாகமே யணியாகவும் செங்கோலோச்சிக் கருங்கலி கடிந்து கூடல் சங்கமத்து ஆகவ மல்லனை அஞ்சுவித்து விக்கலனையும் சிங்கணனையும் உடைபுறங்கண்டு மற்றவன் மாதேவியரோடும் வஸ்து வாஹனங் கைக்கொண்டு இரண்டாம் விசையிலும் குறித்த களத்தாஹவ மல்லனை அஞ்சுவித்து வேங்கைநாடு மீட்டுக் கொண்டு தன்னுடன் பிறந்த முன்னவர் விரதமுடித்து மூன்றும் விசையிலும் சோமேஸ்வரன் கட்டிய கண்டிகை அவிழ்ப்பதன் முன்னம் கம்பிலிசுட்டுக் கரடிக்கல்லில் ஜயஸ்தம்பம் நாட்டி தேவநாதன்முதல்

சாமந்தரைச் சக்கரக்கோட்டத்துத் தாரத்தியவர்களுரிய தாரம்பிடித்துக் கொண்டு கன்னகுச்சிமீட்டு எல்லைகெடாது நிலையிட்டுவிஜயசிம்மா சனத்து உலகமுழுதுடையாளோடும் வீற்றிருந்தருளிய கோராஜகேசரி வர்ம்மரான உடையார் ஸ்ரீ வீரராஜேந்திர சோழ தேவர்க்கு யாண்டு:—

---

## ஆதிராஜேந்திரதேவன்.

---

திங்களேர் மலர்ந்து வெண்குடை மண்டில
மன்னுயிர் தோறு மின்னருள் சுரந்து
திறைநிழல் பரப்பி நிற்ப முறையிற்
செங்கோல் திசைதொறுஞ் செல்லத் தங்கள்
குலமுதற் பருதியின் வலனெளி நீவற்கு
ஒற்றை யாழி யுலாவ நற்றவத்
திருமலர்ச் செல்வியு மிருநிலப் பாவையும்
கீர்த்தியங் கிள்ளையும் போர்த்தனிப் பூவையும்
வதுவையிற் புணர்ந்து தன் னுரிமைத் தேவியராச்
சுடர்மணி மகுடஞ் சூட்டி நெடுநில
மன்னவர் முறைமுறை தன்னடி வணங்க
வீரமுந் தியாகமும் ஆரமெனப் புனைந்து [தருளிய
வீரஸிம் ஹாஸனத்து உலகமுழுதுடையாரொடும் வீற்றிருந்
மாப்புகழ் மனுவுடன் வளர்த்த கோப்பரகேசரி பன்மரான
உடையார் ஸ்ரீ ஆதிராஜேந்திர தேவர்க்கு யாண்டு :—

---

## முதல் குலோத்துங்கன்.

---

### முதல்மெய்க்கீர்த்தி.

திருமன்னி விளங்கு மிருகுவ டனையதன்
தோளும் வாளுந் துணையெனக் கேளலர்
வஞ்சனை கடந்து வயிரா கரத்துக்
குஞ்சரக் குழாம்பல வாரி யெஞ்சலில்
சக்கரக் கோட்டத்துத் தாரா வரசனைத்

திக்கு நிகழத் திறைகொண் டருளி
அருக்க னுதையத் தாசையி லிருக்குங்
கமல மனைய நிலமகள் தன்னை
முந்நீர்க்[50] குளித்த வந்நாள்[51] திருமால்
லாதிஎடுத் தன்ன யாதுஞ்சலியா வகையினி
எடுத்துத்தன் குடைநிழற்கீழ் இன்புற விருத்தித்
திகிரியும் புலியுந் திசைதொறும் நடாத்தி
புகழுந் தருமமும் புவிதொறும் நிறுத்தி
வீரமுந் தியாகமும் மானமுங் கருணையும்
உரிமைச் சுற்ற மாகப் பிரியாத்
தலநிகழ் சயமுந் தானும்வீற் றிருந்து
குலமணி மகுட முறையிற் சூடித்
தன்கழல் தாரதிபர் சூடச் செங்கோல்
நாவலம்புவிதொறும் நடாத்திய கோவிராஜ கேசரிபன்மரான
உடையார் ஸ்ரீ ராஜேந்திர சோழதேவர்க்கு யாண்டு :—

---

## இரண்டாவது மெய்க்கீர்த்தி.

---

புகழ்சூழ்ந்த புணரி யகழ்சூழ்ந்த புவியில்
பொன்னேமி யளவுந் தன்னேமி நடப்ப
விளங்குசய மகளை யிளங்கோப் பருவத்து
சக்கரக் கோட்டத்து விக்ரமத் தொழிலால்
புதுமணம் புணர்ந்து மதவரை யீட்டம்
வயிரா கரத்து வாரி அயிர்முனைக்
கொந்தள வரசர் தந்தள மிரிய
வாளுறை கழித்துத் தோள்வலி காட்டிப்
போர்ப்பரி நடாத்திக் கீர்த்தியை நிறுத்தி
வடதிசை வாகை சூடித் தென்றிசைத்
தேமரு கமலப் பூமகள் பொதுமையும்
பொன்னி யாடை நன்னிலப் பாவையின்

---

(50) முன்னீர்க் (51) வன்னாள்

தனிமையுந் தவிரப் புனிதத்
திருமணி மகுடம் உரிமையிற் சூடித்
தன்னடி யிரண்டும் தடமுடி யாகத்
தொன்னில வேந்தர் சூட முன்னை
மனுவா று பெருகக் கலியா று வறப்ப
செங்கோல் திசைதொறுஞ் செல்ல வெண்குடை
யிருநில வளாக [52]மெங்கணுந் தணாது
திருநிழல் விண்ணிலந் திகழ ஒருதனி
மேருவிற் புலிவிளை யாட வார்கடற்
றீவாந் தரத்துப் பூபாலர் திறைவிடுத்தந்த
கலனுசொரி களிறுமுறை நிற்ப விலங்கிய
தென்னவன் கருந்தலை பருந்தலைத் திடத்தன்
பொன்னகர்ப் புறத்திடைக் கிடப்ப விந்நாள்
பிற்குலப் பிறைபோல் நிற்பிழை என்னுஞ்
சொல்லெதிர் கோடிற் றல்லது தன்கை
வில்லது கோடா வேள்குலத் தரசர்
அளத்தியி விட்ட களிறறின மீட்டமும்
பட்டவெம் பரியும் களந்தனில்
பட்டமும் பரியும் விட்டதன் மானமும்
கூறின வீரமும் கிடப்ப ஏறின
மலைகளு முதுகு நெளிப்ப யிழிந்த
நதிகளுஞ் சுழன்றுடைந் தோட விழுந்த
கடல்களுந் தலைவிரித்[53]தலமரக் குடதிசைத்
தங்நா ளுகந்து தானும் தானையும்
பனனு ளிட்ட பலபல முதுகும்
பயந்தெதிர் மாறின ஜயப்பெருந் திருவும்
பழியுகந் து கொடுத்த[54] புகழின் செல்வியும்
வாளா ரொண்கண் மடந்தைய ரீட்டமும்
மீளாது கொடுத்த[55] வெங்கரி நிரையும்
கங்கமண் டலமும் சிங்கண மென்னும்

(52) விளாகம் (53) தலைவிரி
(54) குடுத்த (55) குடுத்த

பாணி யிரண்டும் ஒருவிசைக் கைக்கொண்
டண்டிய புகழொடு பாண்டிமண் டலங்
கொள்ளத் திருவுளத் தடைத்து வெள்ள
வருபரித் தாங்கமும் பொருபரிக் கலங்களும்
தந்திர வாரியு முடைத்தாய் வந்து
வடகடல் தென்கடல் படர்வது போலத்
தன்பெருஞ் சேனையை யேவிப் பஞ்சவர்
ஐவரும் பொருத போர்க்களத் தஞ்சி
வெரினளித்[56]தோடி அரணெனப் புக்க
காடறத் துடைத்து நா[57]டடிப் படுத்து
மற்றவர் தம்மை வனசரர் திரியும்
பொற்றை[58]வெஞ்சுர மேற்றிக் கொற்ற
விஜயஸ் தம்பம் திசைதொறு நிறுத்தி
முத்தின்[59]சலாபமும் முத்தமிழ்ப்[60]பொதியிலு
மத்தவெங் கரிபடு மய்யச் சய்யமுங்
கன்னியுங் கைக்கொண்டு புனிதத் தென்னாட்
டெல்லை காட்டிக் குடமலை நாட்டுள்ள
சாவே றெல்லாந் தனிவிசும் பேற
மாவே றியதன் வருதினித் தலைவரைக்
குறுகலர் குலையக் கோட்டா றட்பட
நெறிதொறும் நிலைகளிட் டருளித் திறல்கொள்
வீரஸிம் மாஸனந் திரியவிட் டருளிப்
பொங்கொளியா ரமுந்திருப் புயத்தலங் கலும்போல்
வீரமுந் தியாகமும் விளங்கப் பார்தொழுஞ்
சிவனிடத் துமையெனத் தியாக வல்லி
உலக முடையா ளிருப்ப அவளுடன்
கங்கைவீற் றிருந்தென மங்கையர் திலதம்
ஏழிசை வல்லபி ஏழுலக முடையாள்
வாழி மலர்ந்தினி திருப்ப ஊழியுந்
திருமா லாகத்துப் பிரியா தென்றுந்

---

(56) வெருஞெணிதி (57) நாட்டடிப் (58) பொச்சை
(59) முத்தின் (60) முத்தமிட்

உலகமுடையாளோடும் வீற்றிருந்தருளிய கோவி ராஜகேசரி வர்மரான திருபுவனச் சக்கரவர்த்திகள் ஸ்ரீ குலோத்துங்க சோழதேவர்க்கு யாண்டு: —

---

## மூன்றும் மெய்க்கீர்த்தி.

---

புகழ்மாது விளங்கச் செயமாது விரும்ப
நிலமகள் நிலவ மலர்மகள் புணர
உரிமையிற் சிறந்த மணிமுடி சூடி
மீனவர் நிலைகெட வில்லவர் குலைதர
விக்கலன் சிங்கணன் மேல்கடல் பாயத்
திக்கனைத் துந்தன் சக்கர நடாத்தி
விஜயாபி ஷேகம் பண்ணி வீரசிம் ஹாஸனத்து
புவனமுழு துடையாளோடும் வீற்றிருந் தருளிய
கோவிராஜகேசரி பன்மரான சக்கரவர்த்திகள்
ஸ்ரீ குலோத்துங்க சோழதேவர்க்கு யாண்டு:—

---

## விக்கிரம சோழதேவன்.

---

பூமாலை மிடைந்து பொன்மாலை திகழப்
பாமாலை மலிந்த பருமணித் திரள்புயத்
திருநில மடந்தையொடு ஜயமக ளிருப்பக்
கனவரை மார்வந் தனதெனப் பெற்றுத்
திருமக ளொருதனி யிருப்பக் கலைமகள்
சொற்றிறம் புணர்ந்த கற்பின ளாகி
விருப்பொடு நாவகத் திருப்பத் திசைதொறுந்
திகிரியொடு செங்கோல் நடப்ப அகில
புவனமுங் களிப்பதோர் புதுமதி போல
வெண்குடை மீமிசை நிழற்றக் கருங்கலி
யொளித்துவன் பிலத்திடைக் கிடப்பக் குளத்திடைத்

தெலுங்க வீமன் விலங்கல்மிசை யேறவுங்
கலிங்க பூமியைக் கனலெரி பருகவும்
ஐம்படைப் பருவத்து வெம்படை தாங்கியும்
வேங்கை மண்டலத் தாங்கினி திருந்து
வடதிசை யடிப்படுத் தருளித் தென்றிசைத்
தருமமுந் தவமுந் தானமுந் தழைப்ப
வேதமும் மெய்ம்மையு மாதியுகம் போலத்
தலைத்தலை சிறப்பவந் தருளி வெலற்கரும்
போர்ப்புலி யானை பார்த்திவர் சூட
நிறைமணி மகுடம் முறைமையிற் சூடி
மன்னுயிர்க் கெல்லா மின்னுயிர்த் தாய்போல்
தண்ணளி[1] பரப்பித் தனித்தனி பார்த்து
மண்முழுதுங் களிப்ப மனுநெறி யளித்துத்தன்
கோயிற் கொற்ற வாசல் புறத்து
மணிநா வொடுங்க முரசுகள் முழங்க
விசையமும் புகழும் மென்மே லோங்க
வாழி வாழிஇம் மாநிலங் காக்கத்
திருமணிப் பொற்றோட் டெழுதுபத் தாண்டு
வருதிறை[2] முன்னே மன்னவர் சுமந்து
திறைநிறைத்துச் சொரிந்த செம்பொற் குவையால்
தன்குல நாயகன் தாண்டவம் பயிலுஞ்
செம்பொன்னம் பலஞ்சூழ் திருமா ளிகையும்
கோபுர வாசல் கூடசா லைகளும்
உலகு வலங்கொண் டொளிவிளங்கு நேமிக்
குலவரை உதைய குன்றமொடு நின்றெனப்
பசும்பொன்[61]வேய்ந்த பலிவளர் பீடமும்
விசும்பொளி தழைப்ப விளங்குபொன்[62]வேய்ந்து
இருநிலந் தழைப்ப இமையவர் களிப்ப
பெரிய திருநாள் பெரும்பெயர்[63]விழாவெனும்
உயர்பூரட் டாதி உத்திரட் டாதியில்

---

(1) தன்னொளி (2) முறை
(61) மேய்ந்து (62) மேய்ந்து (63) பயிர்

அம்பல நிறைந்த அற்புதக் கூத்தர்
இம்பர்[64]வாழ எழுந்தருளு வதற்குத்
திருத்தேர்க் கோயில் செம்பொன்[65]வேய்ந்து
பருத்திரண் முத்தின் பயில்வடம் பரப்பி
நிறைமணி மாளிகை நெடுந்திரு வீதிதன்
திருவளர் பெயரால் செய்துசமைத் தருளி
பைம்பொற் குழித்த பரிகல முதலால்
செம்பொற் கற்பகத் தொடுபரிச் சின்னமும்
அளவில் லாதன வொளிபெற வமைத்துப்
பத்தா மாண்டில் சித்திரைத் திங்கள்
அத்தம் பெற்ற ஆதிவா ரத்துத்
திருவளர் மதியின் திரையோதசிப் பக்கத்து
இன்ன பலவும் இனிதுசமைத் தருளி
ஒருகுடை நிழற்கீழ்த் தலமுழுதுங் களிப்பச்
செழியர்வெஞ் சுரம்புகச் சேரலர் கடல்புக
அழிதகு சிங்களர் அஞ்சிநெஞ் சலமரக்
கங்கர் திறையிடக் கன்னடர் வெந்நிட
கொங்க ரொதுங்கக் கொங்கணர் சாயமற்
றெத்திசை மன்னருந் தத்தமக் கரணென
திருமலர்ச் சேவடி உரிமையி னிறைஞ்ச
அங்கவன் மகிழுங் கங்கைபொற் பாகிய
தெரிவையர் திலதந் தியாக பதாகை
புரிகுழல் மடப்பிடி புனிதகுண வநிதை
திரிபுவன முழுதுடையா ளெனவுட னிருப்ப
ஊழி அந்நெடு மாலா கத்துப்
பிரியா தென்றுந் திருமக ளிருந்தென
மாதர் மடமயில் பூதலத் தருந்ததி
ஆரணியல்[66]கற்பிற் றரணி முழு துடையா
ளிவன்திரு மார்வத் தருளொடு மிருப்பச்
செம்பொன் வீர சிம்மா சனத்து
திரிபு வனமுழு துடையா ளோடும் வீற்றிருந்தருளிய கோப்பா

(64) இன்பர் (65) மேய்ந்து

கேசரி வர்ம்மரான திரிபுவனச் சக்கரவர்த்திகள் ஸ்ரீ விக்கிரமசோழ
தேவர்க்கு யாண்டு :—

---

## இரண்டாவது மெய்க்கீர்த்தி.

---

பூமாது புணரப் புவிமாது வளர
நாமாது விளங்க ஜயமாது விரும்பத்
தன்னிரு பதமலர் மன்னவர் சூட
மன்னிய வுரிமையால் மணிமுடி சூடிச்
செங்கோல் சென்று திசைதொறும் வளர்ப்ப
வெங்கலி நீங்கி மெய்யறந் தழைப்பக்
கலிங்க மிரியக் கடமலை நடாத்தி
வலங்கொ ளாழி வரையாழி திரிய
இருசுட ரளவு மொருகுடை நிழற்ற

முக்கோக்கிழானடிகளோடும் வீற்றிருந்தருளிய
கோப்பரகேசரிவன்மரான திரிபுவனச்சக்கரவர்த்திகள்
ஸ்ரீவிக்கிரமசோழதேவர்க்குயாண்டு :—

---

## இரண்டாவது குலோத்துங்கன்.

---

பூமன்னு பூத்த வேழுல குந்தா
முன்செய் தவத்தால் பருதிவழித் தோன்றி
நெடுமா லிவனெனச் சுடர்முடி சூடி
இருநில மகளை உரிமையிற் புணர்ந்து
திருமகள் பணைமுலைச் செஞ்சாந் தணைந்து
பருமணி மார்வம் பணிவரை [67] நிகர்ப்ப
திருமகளிருந் தெனவீர சிம்மா ஸனத்து

(66) அரணிய (67) நிகர்ப்ப

ஜயம கள்செழுஞ் சந்தனச் சுவட்டால்
புயமிரு கயிலைப் பொருப்பெனத் தோன்றி
நாமகள் தானும்எங் கோமகன் செவ்வாய்ப்
பவளச் சேயொளி படைத்தன ளியானெனத்
தவள நன்னிறந் தனித்தொடை போமென
புகழ்மகள் சிந்தை மகிழு நாளிலும்
ஒருகுடை நிலவுப் பொருபடைத் திகிரி
வெயிலுங் கருங்கலி இருளினைத் துரப்ப
நீடுபல் லூழி ஏழ்கடற் புறத்திலுங்
கோடாச் செந்தனிக் கோலினி துலாவ
மீனமும் சிலையுஞ் சிதைத்து வானுயர்
பொன்னெடு மேருவிற் புலிவீற் றிருப்ப
உம்பரி யானை ஓரெட் டினுக்குந்
தம்ப மென்னத் தனித்தனி
திசைதொறும் விசைய ஸ்தம்ப நிற்ப
பசிபகை யானது நீங்கு நீங்க
மன்னுயிர் தழைப்ப மனுவாறு விளங்க
மாதவர் தவமும் மங்கையர் கற்பும்
ஆதி அந்தண ராகுதிக் கனலு
மீதெழு கொண்டல் வீசுதண் புனலு
மேதினியில் வளருஞ் சாதி ஒழுக்கமும்
நீதி அறமும் பிறழாது நிகழப்
பாவுப் பழனப் பரப்பும் பணைக்கை
மாவு மல்லது வன்றளைப் படுதல்
கனவிலுங் காண்டற் கரிதென வருந்திப்
புடையினும் பல்வேறு புள்ளினு மல்லது
சிறையெனப் படுத லின்றி நிறைபெருஞ்
செல்வமோ டவனி வாழப் பல்லவர்
தெலுங்கர் மாளுவர் கலிங்கர் கோசலர்
கன்னடர் கடாரர் தென்னர் சோலர்
சிங்கணர் கொங்கணர் சேதிகர் திரிகர்த்தர்
வங்க ரங்கர் வத்தவர் மத்திரர்

கங்கர் சோனகர் கைகையர் சீனரொன்
றறைகழல் வேந்தரும் எல்லா வரைசரும்
முறைமையில் வருந்தித் திறைகொணர்ந் திறைஞ்ச
அம்பொன் மலர்க்கொடிச் செம்பியன் கிழானடி
ஒருமருங் குடனமர்ந் திருப்ப அருள்புரி
சிமையப் பொற்கொடி இமையப் பாவையுஞ்
சிவனும் போலப் புவனமுழு துடையா
ளிவன்திரு மணிமார்வத்
துலகமுழு துடையா ளெனவுட னிருப்பச்
செம்பொன் வீர ஸிம்மா சனத்துப்
புவனமுழுதுடையாளோடும் வீற்றிருந்தருளிய
ராஜகேசரிவன்மரான திரிபுவனச்சக்கிரவர்த்திகள்
குலோத்துங்கசோழதேவர்க்குயாண்டு :—

---

## இராஜகேசரி ராஜராஜன்.

---

கடல்சூழ்ந்த பாரேழுந் திசையெட்டுங் காத்துநின்று
தடமாமதி யெனவிளங்கித் தாளவெண்குடை நிலாவெறிப்ப
ஆழ்வரை வரப்பாக அடற்கலியைப் பிலத்தொதுக்கி
ஊழிதொறும் புகழோங்க ஓராழி வெயிற்பரப்பக்
கயல்சிலையி லாசின் (?) வரையகன்றுளயிற் கரங்குவிப்பப்
புயலாழியிற் போற்றிசெயப் புலிமேருவில் வீற்றிருப்ப
திருவாணையுஞ் செங்கோலுந் திசையெட்டுங் காவல்கொள்ளப்
பெருவாழ்வுபெற்றுயானைத்தும்பி........
சமையமாறுந் தலையெடுப்பத் தருமமூமறு மறையுமேங்கி
அமைவில்லா மனுவொழுக்க மதியாம்படி நிலைநிற்க
ஓர்ப்பினும்தம் முறுகனவிலும் ஒன்றொடொன் றுபகையின்றிப்
போர்ப்புலியும் புல்வாயும் புக்கொருதுறை நீருண்ணப்
பொன்னிநதியும் பொய்யாது பாயலும் புனலார் வாது ?
மன்னியநிதி வளம்பெருக்க விளைவயல் எவ்வளஞ்சுரக்கப்
போகபூமி யிதுவென்னப் போகமெல்லாம் வந்தீண்டி

ஏகவாணை அரசுரிமை எழ்பொழில்களும் [illegible]
பார்க்கடலிற் கார்க்கடலிப் படிவாழ [illegible]சூடி
ஆர்த்த வமராபிஷேகச்....தி லரசந் [illegible]த்தோட
எவ்வுலகமும் இருணீங்க வந்தகோ[illegible]ணிவனென்று
கவ்வைதீரக் கலிகாலத் தாதிகாலங் கா[illegible]டினனென
இவன்காக்கும் புவியனைத்தும் யா[illegible]நினைத் தின்றருளி
பவன்காக்கு மெனஅகில லோகங்கள[illegible] அடியடையக்
குலைபடுவன தெங்குகளே கோட்படுவன இளங்[illegible]
அலைபடுவன [68]நீர் நிலையே அதிர்படுவன இடியேறே
தளம்படிவன போர்வரம்பே தடைபடுவன கோபுரமே
உளம்படுவன சூன்மகளிரே பொறுப்புனைவன மதகளிறே
தடுப்புண்பன கோட்டகமே தளருண்பன பூங்கொடியே
கறைபடுவ னிறைமதியே.......................
பட்டுண்பன அணியல்குலே பரித்தாற்றுவ பரியாகமே
குறைபடுவன குழற்சுருளே குழைவில்லன மணிக்கொங்கையே
மறைபடுவன சூழ்காஞ்சியே மங்கொள் வனக்கிடையே
என்றுபாடிப் பார்வேந்த ரிளங்களிற்றின் மேற்போகச்
சென்றி றைஞ்சிப் பார்வேந்தர் திருவாசற் புறநிற்பச்
சேரலருந் தென்னவருஞ் சிங்களருங் கொங்கணரும்
பேரரசு பெறவேண்டிப் பிரியாது சேவிப்பத் *
தம்மரசு தாம்பெற்று தமுடனே........சூடி
யிருமருங்குந் தேவியர்கள் அணிமங்கலம் பெற்றருள
வாளரசர் தலைகாக்க யாதவகுல மரபில்வந்த [வளவசோளன்
குலமாணிக்க மடநாண்முதற் கணநான்கினவடிவுகொண்டு
உடனுணையுந் திருவாணையு முடன்செல்ல முடிகவித்தான்
மண்ணரசர் வந்திறைஞ்ச மகுடம்புனை வளவனுடன்
பெண்ணரசும் பெருந்தாயமும் பெற்றருளும் பெண்பெருமாள்
உறையூரும் பேருரகையு முதகையுமது ராபுரியு
முறைமுறை யாண்டருளி முளரிநகர் துறந்தவன்னம்
பொன்னாசனஞ் சிங்கவணை பொலங்கற்பகப் பூஞ்சோலை
முன்னேவல் நித்தல்முறை முறையேபெறு முலைப்பெருமாள்

---

(68) நிர்நிலையே

திளகஞதற் கயல்நயனத் தம்பொற்பூவைக் கொம்பன்ன
உளமகிழ வந்தருளிய உலகுடைமுக் கோக்கிழானடியுடன்
வாழிவாழி மணம்புணர்ந் தூழியூழி பலவோங்கிச் (களோடும்
செம்பொன்வீர சிங்காசனத்து உலகுடைமுக்கோக் கிழானடி
வீற்றிருந்தருளிய கோவிராஜகேசரி பந்மரான
திரிபுவனச் சக்கரவர்த்திகள் ஸ்ரீ ராஜராஜ தேவர்க்குயாண்டு: —

(பின்வரும் மெய்க்கீர்த்தியும் மூன்றும் ராஜராஜனதுபோலும்)

சீர்மன்னு மலர்மகளும் சிறந்ததனி நிலச்செவியும்
பார்மன்னு பசுந்துளவச் சயமடந்தையு மனங்களிப்ப
புகழ்மடந்தை புகழ்பாடப் புலமகளும் பூசுரரு
முகமலர்ந்து கண்களிப்ப முனிவர்கணந் துதியெடுப்பத்
தனித்துலக முழுதாளத் தடறதளரவாற் கடல்பிரிந்த
பனித்துளவ நறுந்தாமப் பரந்தாம மெனவந்து
கடிமுரச மொருமூன்றுங் கடலொன்று மெனமுழங்கப்
படிமுழுது மிருணீங்கப் பருதிதனிக் குலம்விளங்கக்
கொடியேந்து புவியிமையக் குலவரைமேல் வீற்றிருப்ப
முடிவேந்த ரடிசூட முறைமையினல் முடிசூட
வடவரையின் படவரவி னணிமுடியும் பொடியாக
தடவரையின் நெடுந்தோளின் வராணிகலன் தரித்தருளிப்
பாரேழும் பொழிலேழும் வடிபரிக்கும் கிரியேழும்
நீரேழுந் தனிகவித்து நிறைமதிவெண் குடைநிழற்றப்
புறவாழியும் வரையாழியும் பூதலமும் பொதுநீக்கி
அறவாழியுஞ் செங்கோலு மனந்தகற்பகாலம் புரக்க
ஒப்பரிய மறைநாலும் முறைதிறம்பா மனுநூலுஞ்
செப்பரிய வடகலையும் தென்கலையுந் தலையெடுப்ப
நீதிதரு குலநான்கும் நிலைநான்கு நிலைநிற்ப
ஆதியுகங் குடிபுகுத அறுசமையந் தழைத்தோங்கப்
பொருதுறையுஞ் சினவேங்கையு மடமானும் புகுந்துடனே
யொருதுறைநீ ரினிதுண்டு பகையின்றி யுறவாடப்
புயல்வாரிபொழிந்த குலப் பொற்றொடியவர் கற்புயர
வுயல்வாரி வளம்பெருகி மறையவர் முத்தமிழ்வளர்க்கும்

நெறிமுறைமையி(ன)டித் தனதாணை திசைநடப்பத் திருப்பர்குலம்
[பெலம்பா ?] நிலங்காவற் றொழிம்பூண்டு.........
....செய்தலில் முருகனென்றுந் திருவடிவில்மதனனென்றும்
பெருகொளியில் பருதியென்றும் பெருந்தகைமையிற் தருமனென்றும்

தண்ணளியில் மதியென்றுந் தனந்தருதலிற் றருவென்றும்
பொன்னுலகத் திகல்வேந்தருமறைவாணரும் போற்றெடுப்ப
மீனவருஞ் சிங்களரும் விக்கலரும் கற்கடரும்
வானவரும் குந்தளரும் வங்களரும் பார்மரும் கங்கவரும்
மாகதரும் பாஞ்சாலரும் காம்போதரும்
கொ(ங்க)ணரும் திருகத்தரும கூபகருஞ் சாவகரும்
பண்டையரும் திருவடிக்கீழ் வரிந்திரைசொரிந் தணிதிறைஞ்ச
எண்டிசையும் புரந்தளிக்கும் இராஜராஜதுங்கன் இராஜராஜன்
மலைபேரிலும் வான்பேரிலும் மாறுரங்கா நிலைபேரிலும்
போரத்தநெஞ்சு டபசெஞ்சேவகன் அரைசல்
பெரும் புகழாகாம மங்கயருக் கரசாகி
உலகுடைய பெருமானுடன் ஒக்கமணிமுடிகவித்தாள்
உறந்தைவள நகரம்போல உலகத்தில் பொருபதிநான்கும்
பிறந்துடையாள் இராஜராஜந்பிரியாவெனக்கா
றியல்(?) வாழவும் இசைவாழவும் இமையமலை மகளறத்தின்
செயல்வாழவும் ராஜராஜன் திருத்தாலி பெற்றுடையார்
அரசிறைஞ்ச ழகநறளந்த வுலகுதனில்
உரைசிறந்த தனியாணை உடனாணை பெற்றுடையாள்
தவளவயபரிகண்டளகாத்தளிக்குங்கற்பகாலம்
புவனியெழத் தனதாணையிற் புரக்குவந்தவந்தப்புரப்பெருமாள்
பொய்யாநெடு நிலநான்கும் பொருகுடையினிருநான்கும்
மாதிரமும்மிருணீங்கவந்தவாணர்குலநிலைவிளக்கு
குலகரியெட்டும்பரித்த குலவட்டமலர்கனிதைச்
சக்கரவர்த்திதனந்தப்புரச்சக்கரவர்த்திகாசெறிய
கொடையல(?)வானவாச்சி குலதீபா தாரபதி
மாமாதேவியார்தொழுதிறைஞ்சும்மடந்தைமார்கவர்தம்பெருமாள்
அவ்வுலகத் தருந்ததியும் அதிசயிக்கும் பெரும்கற்பா

விவ்வுலகத் தருந்ததியென விசைந்த நிறைவிளங்கத்
திருந்தியவேல் இராஜராஜன்ராஜேந்த்ரு திருவருளொன்றும்
பெருந்தனிப்பாற் கடல்படிந்து விளையாடும் பெடையென்னும்
ஆணைபெற்றுத் தனதாக்கிய ஆதிஇராஜன்மாதேவிவளர்வங்(கு)
சூளாமணி மறையவர்தொழுஞ்சிந்தாமணி
சோணுடன் இராஜராஜன் சூடுமலர்பூந் துளாய்மார்பில்
பூணா மெனவிளங்கிய புவன முழு துடையாளும்
அணைந்தகற்பநாள் பிரியாது மனங்களித்து மணம்புணரச்
செம்பொன்வீரஸிம்ஹாஸனத்துப் புவனமுழுதுடையாளோடும்
வீற்றிருந்தருளியகோ ராஜகேசரிவன்மரான
திரிபுவனச்சக்கரவர்த்திகள்ஸ்ரீராஜராஜதேவற்குயாண்டுநாலாவது.

---

## மூன்றாம் குலோத்துங்கன்.

---

புயல்பெருக வளம்பெருகப் பொய்யாத நான்மறையின்
செயல்வாய்ப்பத் திருமகளும் ஜயமகளும் சிறந்துவாழ
வெண்மதிபொற் குடைவிளங்க வேல்வேந்த ரடிவணங்க
மண்மடந்தை மனமகிழ மனுவின்நெறி தழைத்தோங்கச்
சக்கரமுஞ் செங்கோலுந் திக்கனைத் துஞ்செல்லக்
கற்பகாலம் புவிகாப்ப பொற்பமைந்த முடிசூடி
விக்ரமபாண்டியன் வேண்டிவிட்ட தூண்டால்
வீரபாண்டியன் மகன்[1] படஏழகப்[2]
படமறப் படைபடச் சிங்களப் படைமுக்
கறுப்புண்டு அலைகடல் புகவீர பாண்டியனை
முதுகிடும் படிதாக்கி மதுரையும் அரசுங்கொண்டு
ஜயஸ்தம்பநட்டு அம்மதுரையு மரசும் நாடும்
அடைந்த பாண்டியற் களித்தருளி
மெய்ம்மலர்ந்த வீரக் கொடியுடன் தியாகக் கொடிஎடுத்துச்
செம்பொன் வீர சிங்கா தனத்துப்
புவனமுழு துடையாளோடும் வீற்றிருந்தருளிய

---

(1) மக்கள் (2) ஏழகத்தார்

கோப்பரகேசரிபன்மரான திரிபுவனச் சக்கிரவர்த்திகள் ஸ்ரீகுலோத்துங்கசோழதேவர்க்குயாண்டு:—*

---

## மூன்றும் இராஜேந்திரன்.

---

[illegible]

---

* அல்லது. "முடிபுனைந்து தண்டொன்றுல வீரபாண்டியன் றன் மகனை மூக்கறிந்துகொண்டு விக்ரமபாண்டியற்கு கூடல் மாநகர் குடுத்து மீண்டதற் பின், எடுத்துவந்து பரிபவத்தால் நெட்டூரில்—எதிர்த்த வீரபாண்டியனை முடித்தலைகொண் டமர் முடித்தவன் மடக்கொடியைவேளம் வற்றித் திருவிழந்த தென்னவனும் சேரனும்வந்திறைஞ்சி யரியணையின் கீழிருக்க அவன்முடிமே லடிவைத்துப் படிவழங்கிய முடிவழங்கி பாண்டியறகு விடைகொடுத்து கொடி வழங்கு வில்லவற்கு கொற்றவர் பெருதிருவழங்கி வீரகேரளனை விரல்தறித்து வென்கொண்டு வந்திறைஞ்சப் பாரறிய வாழ்வருளிப் பரிகலதத்தி லமுதளித்துப் பருதிகுல பதியென்னுந் திருநாமம் பரித்த பாண்டியற் கிருநிதியமும் பரிவட்டமு மிலங்கு மணிக்கலனும்நல்கி தியாகவீரக் கொடியெடுத்து வாகைவீரக் கழல் கட்டித் திக்கெட்டு மேவல் கேட்ப சக்கரவெற்பில் புகழெழுதிப்பச் செம்பொன் வீரசிங்காஸனத்து" &c—என்றும்பாடம்.

# அநுபந்தம் II.

ஸலியாத ஸாஜஹா.ந விதூராவஞூஹஆதிராஜ ஹுூதயஸஶு
திரிபுவனச்சக்கரவா்த்திகள் ஸ்ரீராஜேந்திரசோழதேவர்க்கு யாண்டு.—†

---

† இதன்பொருள் :—

" எல்லாவுலகத்திற்கும் ஒரே வீரனும், வாளாயுதம் பிடிப்பதில் ஒரு தனி வீரனும, (அதாவது ஒப்பற்றவனும்), வீரராக்ஷஸன் என்னும் பெருத்த புகழுடையவனும், லங்காராமன் என்று சொல்லப்படுகிறவனும், மனுவின் குலத்தை உயர்த்தினவனும், பயங்கரமான போர்க்களத்து எதிர்ந்த அரசர்களுக்கோர் கொடுங்காற்றும், சோளவம்சத்திற்கு நேரும் அவமானத்தை விலக்குவதில் பராக்கிரமமுடையவனும், மூன்றுவருஷ.................தரித்த கிரீடங்களையுடையனும், ராஜர்களுக்கு ராஜனும், சுவர்க்கதாவிகளின் சேர்த்தியால் கர்வமுள்ள பாண்டியன், கேரளன் என்ற இரண்டு அரசர்களால் இரண்டு சாமரங்கொண்டு வீசப்பட்டவனும், பாண்டியன் தேசத்தைத் திருடின கர்ஞட ராஜாவுக்கு விபரீதனும், யமதண்டனையாகிய சமுத்திரத்தில் மூழ்கிப்போன (மடிந்த) சைன்னியத்தின் தலைவனை வீரசோமேசுவரன் கையால் விடப்படாமல் (அணைத்துத்தழுவபபெற்று) இருக்கிற பாதங்களையுடையவனும், வீரர்களுக்கு அலங்காரமாயும், ராஜபரமேசுவர, ராஜபரமமாஹேசுவர, ராஜநாராயண என்று கூறப்படும் பெயர்களையுடையவனும், எல்லா மதங்களையும் நிலைநிறுத்தினவனும், மதித்தயானைச்சேனையின் திரள்களை ரக்ஷிக்கிறவனும் (காலாட்கள்) சேனையை காத்தற்பொருட்டு அடிக்கடி சுற்றிவருகிறவனும், அரசர்கள், சங்கீதம், கல்வி இவைகட்கு அதிபதியாயும், மற்றரசர்கள மனதிறகு சல்யமென்னும் ஆயுதத்துக்கு ஒபபானவனுமாகிய திரிபுவனச் சக்கிரவர்த்திகள் ஸ்ரீராஜேந்திர சோழதேவர்க்குயாண்டு"

---

# பெயரகராதி.


பெயர்.] [பக்கம்

அகளங்கன், (விக்கிரமசோழன்) 36
அகாலவர்ஷன், (இரட்டகிருஷ்ண தேவன்) 10.
அசோகையன், 22.
அதிராஜேந்திரன், 26.
அநபாயன், (குலோத்துங்கசோழன் I,) 27, 29.
அபயன், (ஷை), 27.
அபிமானவல்லி, 15.
அப்பிரமேயன், 13.
அமரபுஜங்கபாண்டியன், 13.
அமராபரணன், சீயகங்கன், 42.
அமமங்காதேவி, 27.
அம்மங்கை, 29.
அய்யப்பநுளம்பன், 14.
அய்யனதண்ணுக்கன், 46.
அரிகாலன், 5
அரிஞ்சயன், 9.
அருண்மொழித்தேவர், (இராஜராஜ தேவன், I.), 15.
அரைசூர், 8.
ஆதித்தனுகிய கோதண்டராமன், 9.
ஆதித்தன் I, 8.
ஷை II, 12.
ஆரப்பாக்கம், 40.
ஆலங்குடி, 23.
ஆளவந்தான், 37.
ஆனைமங்கலம், 17.
ஆவியன், 22.
ஆஹவமல்லன், 20, 22, 25.
இந்திரரதன், 18.
இரணசூரன், 18.
இராமேசுவரம், 37.
இராஜகம்பீரச்சேதியராயன், 42.
இராஜகேசரி, 5, 7.
இராஜசிம்மபாண்டியன், 8.
இராஜமஹேந்திரவர்ம்மன், 23.
இராஜராஜக்காடவராயன், 42.
ஷை சேதியராயன், 42.
இராஜராஜதேவன் I, 12, 17.
ஷை II, 37.
ஷை III, 42, 43, 45.
ஷை I (சாளுக்கிய—)27, 42.
இராஜராஜபுரம், (தழைக்காடு,) 13.
இராஜராஜப்பெரும்பள்ளி, 17.
இராஜராஜமூவேந்தரையன், 42.
ஷை வாணகோவரையன், 42.
இராஜராஜேசுவர நாடகம், 16.
இராஜாதித்த தேவன், 9.
ஷைபுகழ்விப்பவர்கண்டன், 10.
இராஜாதிராஜன் 1, 19.
ஷை II, 37.
இராஜேந்திரசோழசம்புவராயன், 42.
இராஜேந்திரசோழதேவன் I, 15, 17.
ஷை II, (குலோத்துங்கசோழ தேவன்,) 19.
ஷை III, 42, 47, 48.
இராஜேந்திரமிருத்யுஜித், 5.
இலங்காபுரிதண்டநாயகன், 37.
இக்ஷ்வாகு, 5.
ஈழம், 8, 15, 20.
உடையார்கோயில், 35.
உதயசந்திரன், 6. [12.
உத்தமசோழன் I (மதுராந்தகன் I)
ஷை II (இராஜேந்திர சோழ தேவன் I,) 17.
உமாபதிதேவர், (ஞானசிவதேவர்,) 40.
உறையூர், 45.
எதிரிலிசோழன், குலோத்துங்கன் I.
ஷைசம்புவராயன், 40, 42.
எள்ளேரி, 46.
எழிசைவல்லபி, 29.
கக்கராஜன், 11.
கங்கபாடி, 13.
கங்கைகொண்டசோழதேவன் (இராஜேந்திரசோழதேவன் I) 19.
கடாரம், 17, 18.
கண்டதேவமழவராயன், 38.
கண்டராதித்தன் I, 9.
ஷை II, 12, 16.
கண்ணனூர், 45.
கம்பவர்ம்மன், 11.

கம்பிலி, 21.
காடிக்கல், 26.
கரபத்திரன் (யானை), 22.
கரிகாலசோழ ஆடையூர்நாடாள்வான், 43.
கரிகாலன், 4, 61.
கருணாகரத்தொண்டைமான், 32
கருந்தங்குடி, 38.
கலிங்கத்துப்பரணி, 23, 29, 31.
கலிங்கம், 26, 31.
கலியாணபுரம், 31.
கலியூர், 13.
கல்லியூர்மூலை, 46.
கன்னரதேவன், 8.
ஷை (இரட்டகிருஷ்ணதேவன், அகாலவர்ஷன்) 10.
கன்னியாகுப்ஜம், 20.
கன்னியாகுமரி, 31.
காகதீய கணபதி, 41, 47.
காசியபன் V, 8.
காஞ்சிபுரம், 5, 41.
காடக கஜபதி, 47.
காந்தளூர, 13:
காவிகன், 14.
கீழைமங்கலம், 38.
குடகு, 13.
குண்டமய்யன், 22.
குந்தவ்வை I, 14, 15.
ஷை II, 28.
ஷை III, 29.
குந்துகாலம், 37.
குலசேகரபாண்டியன், 37.
குலோத்துங்க சோழதேவன் I, 22, [26—33.
ஷை II, 36.
ஷை III, 41, 43.
ஷை சம்புவராயன், 42.
ஷை பிருதிகங்கரையன், 43.
ஷை வாணகோவரையன், 42
குறும்பராயன், 39.
கேசவய்யன், 25.
கோங்கு, 5, 37, 38.
கொட்டிகதேவன், 11.
கொப்பம், 21.
கொல்லம், 14
கொல்லாபுரம், 21.
கொள்ளிச்சோழகோன், 46.
கோக்கிழானடிகள், 9.
கோச்செங்கணான், 4.
கோட்டாறு, 31.
கோப்பெருஞ்சிங்கன், 46.
கோயிலொழுகு, 23.
கோவிந்தசந்திரன், 18.
சக்கரக்கோட்டம், 26.
சங்கிராமராகவன்,(பராந்தகன் I). 8.
சங்கிராம விஜயோத்துங்கவர்ம்மன், [18.
சத்தியவ்வை, 22.
சத்தியாசிரயன், 15.
சத்துருபயங்கரன் (யானை) 22.
சந்தயன் (வைதும்ப—,) 9.
சமுத்திர கொப்பய தண்ணாக்கன் 46.
சாங்கப்பை, 22.
சாந்தனேரி, 39.
சாமுண்டராயன், 25.
சிபி, 5.
சிலப்பதிகாரம், 3.
சிவபாதசேகரன், 15.
சீனத்தரையன், 46.
சுந்தரசோழன், 11.
சுந்தரபாண்டியன், 20.
ஷை சடாவர்ம்மன், 47.
ஷை மாறவர்ம்மன், 43.
சூளாமணிவர்ம்மன், 17.
செம்பியனமாவலிவாணராயன் (பிரதிவிபதி II), 9.
சேக்கிழார், 33.
சேந்தமங்கலம், 46.
சேவூர, 11.
சோடன், 35.
சோணாடு, 5, 14.
சோழகோன், 46.
சோழமாதேவி, 15.
சோளன், 5.
சோளேந்திரசிங்கபிருதிகங்கரையன், [43
தக்கோலம், 10.
தசபன்மன்; 22.
தண்டியலங்காரம், 27.
தரணிமுழுதுடையாள், 36.
தழைக்காடு, (இராஜராஜபுரம்), 13.
தாராதேசம், 25, 30.

தியாகசமுத்திரம், (விக்கிரமசோழன்) 36.
தியாகவல்லி, 29.
திரிபுவனமுழுதுடையாள், 36.
திரிபுவனவீரதேவன், (குலோத்துங்கன் III.) 41.
திருக்கழுக்குன்றம், 48.
திருக்காளப்பேர், 39.
திருநீற்றுச்சோழன், (குலோத்துங்க சோழன் I) 33.
திருப்பாதிரிப்புலியூர், 46.
திருப்பாவி, 39.
திருப்புத்தூர், 39.
திருப்புறம்பியம், 8.
திருப்பேர்நகர், (கோவிலடி), 35.
திருமழபாடி, 48.
திருவக்கரை, 46.
திருவயிந்திரபுரம், 47.
திருவானைக்கா, 48.
திருவிசலூர், 15.
திருவேகம்பம், 38.
திருவையாறு, 48.
திருவொத்தூர், 36.
திரைலோக்கியமாதேவி, 15.
தீனசிந்தாமணி, (மதுராந்தகி), 29.
துத்தன், 22.
தெலுங்கவீமன், 36.
தென்னவப்பல்லவராயன், 38.
தொண்டமானல்லூர், 46.
தொண்டனூர், 33.
தொண்டி, 38, 39.
தொரசமுத்திரம், 46.
தொழுதகையூர், 46.
நங்கிலி, 31.
நந்திபுரம், 6.
நந்திவர்ம்மன்பல்லவமல்லன், 5.
நம்பியாண்டார்நம்பி, 16.
நவிலை, 31.
நன்னிநுளம்பன், 22.
நன்னூல், 42.
நாகண்ணன், 14.
நாகபட்டணம், 17.
நாகவர்ம்மன், 14.
நாதமுனிகள், 19.
நிருபதுங்கவர்ம்மன், 6.
நுளம்பபாடி, 13.
நெட்டூர், 41.
பஞ்சவமாராயன், (க்ஷத்திரியசிகாமணி கொங்காள்வான்), 14.
பஞ்சவன்மாதேவி, 15.
பண்டிதசோழன் (இராஜேந்திரசோழதேவன், I.), 18.
பத்துப்பாட்டு, 3.
பரகேசரி, 5.
பரமேசுவரப்போத்தரசன், 5.
பராக்கிரம பாகு, 37
பராக்கிரமபாண்டியன், 37.
ஷை புரம், 37.
பராந்தகன் (I) 8.
ஷை (II) 11, 12.
பல்லவராயன், 39, 40.
பல்லவர்கள், 5.
பனசோகே, 14.
பாசி, 39.
பாண்டிநாடுகொண்டானை சம்புவராயன், 42.
பாண்டியராஜன், 37.
பாதபதம், 38.
பாளையங்கோட்டை, 39.
பிருதிவிபதி I—6.
ஷை II, (செம்பியன்மாவலிவாணராயன்,) 9.
பில்ஹணகவி, 31.
புலகேசி, 22.
புறநானூறு, 3.
புஷ்பகப்பிடி (யானை), 25.
பூதுகன், பூதராஜன், 10.
பெரியதிருமொழி. 4 (f. n.)
பெரியபுராணம், 27, (f. n.) 33.
பெருநற்கிள்ளி, 4.
பொதியமலை, 31.
பொத்தப்பிநாடு, 25.
பொன்மாளிகைத்துஞ்சியதேவர், 12.
பொன்னமராபதி, 39.
பொன்னம்பலம், 46.
போசளநாரசிம்மதேவன் II, 45.
மகிபாலன், 18.
மஞ்சக்குடி, 39.
மணமேற்குடி, 39.
மணலூர், 31.
மதுராந்தகன் I. 12.
ஷை (இராஜேந்திர சோழதேவன் [I]. 17.

மதுராந்தகி (தீனசிந்தாமணி), 24, 29.
மலாடு, 5.
மஹேந்திரபர்வதம், 18, (f. n.)
மாதேவடிகள், 15.
மாப்பபாளம், 18.
மாமல்லபுரம், 5
மாலவ்வி, 14.
மாறய்யன், 25.
மாறவர்ம்மன் சுந்தரபாண்டியன், 43.
மானவீரமதுரை, 38.
மானாபரணன், 20, 22.
மிண்டிங்கல், 19.
முக்கோக்கிழானடிகள், 36.
முசுகுந்தன். 5.
மும்முடிசசோழன் (இராஜராஜன் I), [15.
முன்னலூர், 33.
மூலபத்திரன் 22.
மேலைமங்கலம், 38.
மொட்டையன், 22.
வடுகவழிமேற்கு (வாணகப்பாடி), 9.
வரகுணபாண்டியன், 6.
வல்லவன், 5.
வனவாசி, 18.
வன்னிரேவன், 22.
விக்கிரமசோழனுலா, 23.
விக்கிரமசோழன் (இராஜேந்திரசோழன் I), 17.
ஷை I (குலோத்துங்கன்மகன்) [35.
விக்கிரமபாண்டியன், 20.
விக்கிரமபாஹு, 20.
விக்கிரமாதித்தன் (குந்தள—), 20, 26, 30.
விசயகண்டகோபாலதேவன், 41, 47.
வித்தியாதரன், (வாண—) 9.
விமலாதித்தன் (சாளுக்கிய—,) 14.
வியாக்கிரகேது, 5.
விழிஞம், 31.
விஜயவாடை, 26.
விஜயாதித்தன் IV (வாண—,) 9.
ஷை (விஷ்ணுவர்த்தன—, குந்தள—,) 20.
விஜயாலயன், 7.
வீரகங்கநாடாழ்வான், 46.
வீரசம்பன், 48.
வீரசலாமேகன், 20, 22.
வீரசோமீசுவரன், 45, 47.
வீரசோழன், பிருதிவிபதி II,) 9.
ஷை (சாளுக்கிய—), 30.
வீரபாண்டியன், 38, 41.
வீரராஜேந்திரன், 25
ஷை (குலோத்துங்கதேவன் III) [41.
வேலநாண்டு, 35.
வேங்கி (வேங்கைநாடு), 13, 30.
வேம்பில், 8.
ஸ்ரீ கிருஷ்ணன் ராமன், 17.
ஸ்ரீரங்கம், 44, 48.
ஸ்ரீராமாநுஜாசாரியர், 33.
ஸ்ரீவில்லிபுத்தூர், 39.
ஜகத்விஜயன் அல்லது ஜகத்ரததண்டநாயகன், 40.
ஜயங்கொண்டசோழன் (இராஜாதிராஜ சோழதேவன் I), 21.
ஜயசிங்கன், 18, 22, 30.
ஜயதரன், குலோத்துங்கசோழதேவன் I), 27.

உ

# பிழை திருத்தம்.

| பக்கம் | வரி. | பிழை | திருத்தம். |
|---|---|---|---|
| 7 | 23 | யரன | யான |
| 11 | 32 | Rajendrachola deva, Ante. P. 1. | Rajendracholadeva. |
| 12 | 5 | துருகிய | துஞ்சிய |
| 22 | 11 | தேவன் | ரேவன் |
| 64 | 4 | சோரமுப் | சோழப் |
| 83 | 20 | சக்கைகொண்ட | கங்கைகொண்ட |
| 84 | 21 | போசல | போசள |
| 97 | 8 | நாதலங் | நாதலைந் |
| 99 | 25 | தேபரும் | சோளம் |
| 109 | 21 | போராக | பொராக |
| 110 | 9 | நிலைச்செவியும் | நிலைச்செல்வியும் |
| ஷை | 14 | நறுத்தாம | நறுந்தாம |
| ஷை | 32 | வளர்க்ரும் | வளர்க்கும் |

குறிப்பு:—௯௫-ம் பக்கத்துக்கு முன்னுள்ள வம்சாவளியில் குலோத்துங்கசோழதேவள் I என்றிருப்பதைக் குலோத்துங்கசோழதேவன் I என்று திருத்தியும், க௦௨-ம் பக்கம் 31-வது வரி 'திருமா லாகத்துப் பிரியா தென்றுங்' என்றதற்குப்பின் 'திருமக ளிருந்தென வீரஸிம் மாசனத்து' என்று சேர்த்தும் வாசித்துக்கொள்க.